# கடை ஏழு வள்ளல்கள்

**பேரா. முனைவர் த. டான் ஸ்டோனி**
**தமிழ்த்துறை**
**இலயோலா கல்லூரி, சென்னை**
**Prof.donstony@gmail.com - 9944911404**

| | | |
|---|---|---|
| 1. | பேகன் | மயிலுக்குப் போர்வை தந்தவன் |
| 2. | பாரி | முல்லைக்குத் தேர்க் கொடுத்தவன் |
| 3. | காரி | இரவலர்க்கு குதிரையுடன் நாட்டைக் கொடுத்தவன் |
| 4. | ஆய் | சிவனுக்கு பாம்பு நல்கிய நீலமணியையும் ஆடையும் கொடுத்தவன் |
| 5. | அதிகன் | ஔவைக்கு நெல்லிக்கனியைக் கொடுத்தவன் |
| 6. | நள்ளி | மனம் மறைக்காது தன்னிடமிருந்த அனைத்தையும் கொடுத்தவன் |
| 7. | ஓரி | கூத்தர்களுக்கு தன்னுடைய நாட்டையே கொடுத்தவன் |

## 1. பேகன்

- ஆவியர் குலத்தில் தோன்றியவன்.
- அரிய ஆற்றலும் அழகினையும் உடையவன்.
- மலைநாட்டை உடையவன் பேகன்.
- அது மழைவளம் வாய்த்த மலை.
- மலைப் பக்கத்தில் திரிந்த மயில் ஆடி அகவியது.
- மயில் குளிரால் நடுங்கிக் கூவுவதாகக் கருதி அம்மயிலின் குளிரைப் போக்கத் தன் போர்வையைத் தந்தான் பேகன்.

## 2. பாரி

- பறம்பு மலைக்குத் தலைவன் பாரி
- பல அருவிகள் விழும் வளமுடையது அம்மலை.
- சுரபுன்னையும் முல்லை கொடிகளையும் உடையது அம்மலை.
- வண்டுகள் உண்ணும் தேன் பிலிற்றுகின்ற சிறிய மலர்களையுடைய முல்லைக் கொடி கொழு கொம்பு இன்றிப் படரத் தவித்தது.
- தன் பெரிய தேரை அக்கொடி படரக் கொடுத்தான் பாரி

## 3. காரி

- மலையமான் திருமுடிக்காரி எனவும், மலையமான் எனவும் அழைக்கப் பெற்றவன் காரி,
- வீரக்கழலினையும் தொடியினையும் அணிந்த பெரிய கைகளையுடையவன்.
- நெருப்புப் போன்ற சினத்தன்
- பகைவர் அஞ்சும்படியான நீண்ட வேலையுடையவன்.
- ஒலிக்கின்ற மணியையுடைய வெண்மையான பிடரி மயிரினையுடைய தன் குதிரையுடன்,
- தன் நாட்டையும் இவ்வுலகத்தினர் வியக்கும்படி,
- இனிய நன்மொழிகளைப் பேசி இரவலர்க்கு ஈந்தவன்

## 4. ஆய்

- வேள் ஆய், ஆய் அண்டிரன் என்றும் அழைக்கப் பெற்றான் ஆய்.
- வில்லைத் தாங்கிய சந்தனம் பூசிய திண்மையான தோள்களையுடையவன் ஆய்,
- நற்சொற்களை விரும்பிப் பேசுபவன்
- கல்லால நிழலின் இருந்த இறைவன் சிவனுக்கு, மகிழ்வோடு நாகம் ஈன்ற நீலமணியையும், ஆடையையும் கொடுத்தவன்

## 5. அதிகன்

- அதிகமான் நெடுமான் அஞ்சி, அதியன், அஞ்சி என்ற பெயர்களைக் கொண்ட அதிகன்,
- தன் பெருமை மிக்க மலையில்,
- மலர்கள் மணம் கமழும் பக்க மலையில் அமிழ்து போன்ற சுவையான, நீண்ட நாள் வாழும் தகைமை வாய்ந்த நெல்லிக்கனியைத் தான் உண்டு நீண்ட நாள் வாழ வேண்டுமென்று நினைக்காது, ஔவையார் என்ற புலவர்க்குக் கொடுத்தான்
- வலிமையும் சினமும் நின்றெறியும் ஒளி பொருந்திய நீண்ட வேலையுமுடையவன் ஆரவாரமுடைய படையையுடைய அதியமான்

## 6. நள்ளி

- குளிர்ச்சி பொருந்திய தோட்டிமலைக்குத் தலைவன் நள்ளி.
- பருவம் தவறாது மழை பொழிகின்ற காற்றுத் தங்கும் நீண்ட உயரமுடைய மலை.

- போர் முனையில் தன் ஆற்றல் விளங்கும் பெருமை பொருந்திய கைகளையுடையவன்,
- தன்னை விரும்பி அண்டினோர்க்கு, மனம் மறைக்காது, அவர்களுக்குத் தேவையானவற்றை எல்லாம், குறையாது. தன்னை உணர்த்தாது கொடுப்பவன்

## 7. ஓரி

- வல்வில் ஓரி, ஆதனோரி என்று அழைக்கப்பெறும் ஓரி,
- கொல்லி மலைத் தலைவன்.
- சுரபுன்னை மரங்கள் மிகுதியாக உள்ள மலை,
- நெருங்கிய கிளைகளில் மணமிகுந்த மலர்கள் நெருக்கமாக அச்சுரபுன்னை மரங்களில் பூத்திருந்தன.
- பல சிறு மலைகளை பொற்றைகளை) யுடைய தனது நல்ல வளமுடைய நாட்டைக் கூத்தாடுவோர்க்குக் கொடுத்தவன் ஓரி.
- அவன் காரிக்குதிரையையுடைய மலையமான் திருமுடிக்காரியுடன் வாரிட்ட ஓரிக் குதிரையையுடைய ஓரி